# தலபுராணம் என்னும் கருவூலம் – 1

*July 7, 2010*

- முனைவர் கோ.ந. முத்துக்குமாரசுவாமி



தமிழ் இலக்கிய உலகில் 16-ஆம் நூற்றாண்டிலிருந்து 19-ஆம் நூற்றாண்டுவரை *தலபுராணம்* என்னும் இலக்கியவகை ஒன்று சைவ உலகில் செல்வாக்குப் பெற்றிருந்தது. இது வடமொழியில் உள்ள பதினெண்புராணங்களின் அமைப்பிலிருந்து வேறுபட்ட அமைப்பினைக் கொண்டதோர் இலக்கியவகை.

புராண இலக்கியங்களைப் படைத்தோர் பெரும்பாலும் சைவசமயச் சார்பு உடையவராகவே விளங்கினர். இந்த இலக்கியவகை தோன்றியமைக்கு 16-ஆம் நூற்றாண்டிக்குப்பின் தமிழுக்கும் தமிழகத்துக்கும் நேர்ந்த நெருக்கடியும் ஒரு காரணமாகும்.

16-ஆம் நூற்றாண்டுக்குப் பின் தமிழகத்தில் நேர்ந்த அரசு மாற்றங்களின் காரணமாக, தமிழ், அரசின் ஆதரவை இழந்தது. நாயக்க மன்னர்கள் ஆட்சியிலும், தஞ்சை மராட்டியர் ஆட்சியிலும் வைதிக மதம் ஓரளவு தழைத்தது, பழைய திருக்கோயில்கள் புதுக்கோலம் பெற்றன எனினும் தமிழ்மொழிக்கும் இலக்கியத்திற்கும் அவர்களிடம் ஆதரவு கிடைக்கவில்லை. அரசின் ஆதரவு இல்லாதுபோயினும் மக்களின் ஆதரவு தமிழுக்கு ஓரளவு இருக்கவே செய்தது. செல்வர்களின் ஆதரவில் காதல், மடல், தூது, நொண்டிநாடகம் போன்ற காமச்சுவை மிக்க சிற்றிலக்கியங்கள் பெருகின. **வருணகுலாதித்தன் மடல், கூளப்பநாயக்கன் காதல், கூளப்பநாயக்கன் விறலிவிடு தூது** போன்ற இலக்கியங்கள், காமச்சுவை மிக்கன; எனினும் அவற்றில் உள்ள சொற்சுவையும் இலக்கியச் சுவையும் தமிழ் ஆர்வலருக்கு இன்பம் அளிப்பனவே. ஆயினும் கழிகாமம் பேரழிவினை விளைத்துவிடும் என்னும் அற உணர்வு சிலப்பதிகார காலம் முதல் தமிழ்ச் சான்றோர் உலகில் வேரூன்றி இருந்தது.

இந்தக் காலகட்டத்தில் **உமாபதி சிவம், குருநமச்சிவாயர், குருஞான சம்பந்தர்** முதலிய அருளாளர்கள் தோன்றினர்; திருவருளால் அற்புதங்கள் பல நிகழ்த்தினர். மக்களிடம் செல்வாக்குப் பெற்றனர். மக்களிடம் அவர்களுக்கு இருந்த செல்வாக்கு அன்று ஆட்சியிலிருந்த அரசமரபினரையும் அவர்கள்பால் ஈர்த்தன. **திருமடங்கள்** தோன்றின. ஆட்சியில் உருதுவும் தெலுங்கும் மராட்டியும் இருந்தாலும் திருமடங்கள் தமிழிலக்கியங்களைப் படைத்தும் விரும்பிவந்தவருக்குத் தமிழமுதுடன் சைவநெறியை ஊட்டியும் தமிழையும் சைவத்தையும் வளர்த்தன. திருமடத்தில் இருந்த **தம்பிரான் சுவாமிகள்** துறவிகள். சுகபோகத்தைத் துறந்துவிட்ட அவர்களுக்கு உண்டியும் உறையுளும் திருமடங்கள் அளித்தன. அவர்கள் சைவத் தொண்டும் தமிழ்த்தொண்டும் ஆற்றுவதே குறிக்கொண்டு வாழ்ந்தனர். பலர் சைவம் கூறும் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நெறியில் உயர்ந்த அனுபவத்தைப் பெற்றனர். தாம் பெற்ற பேரின்பத்தைப் பிறருக்கும் பகிர்ந்தளிக்க விழைந்தனர்.

முற்றக் கற்றுணர்ந்த தலையாய அறிவினர் ஒரு நாட்டில் சிலராகத்தான் இருக்க முடியும். இருந்தாலும், தங்களுடைய அனுபவங்களை நாட்டில் உள்ள பிறரும் பெறுதல் வேண்டும், பெற்றால்தான் நாட்டில் உணர்வொற்றுமை (emotional integration), ஒருமைப்பாடு நிலவமுடியும். தமிழுக்கும் சைவத்திற்கும் அந்நியமானவர்கள் ஆட்சியதிகாரத்தில் இருந்த சூழலில் சைவமடத்தில் இருந்த ஞானியரும் சான்றோரும் தமிழ் மக்களுக்குச் சிவநெறியின்வழி உணர்வொற்றுமையை ஊட்டி வளர்க்கும் பணியை மேற்கொண்டனர். **உமாபதி சிவம், சிவஞான முனிவர், கச்சியப்ப முனிவர்** முதலியோர் சிவஞானியராக இருந்ததோடு தமிழ் நேயர்களாகவும் இருந்தனர். அதனால் அவர்களின் சைவப்பணி, தமிழ் இலக்கியப் பணியாக மலர்ந்தது.

முதலில் தோன்றிய தலபுராணம் உமாபதி சிவம் அவர்கள் பாடிய **திருக்கோயிற்புராணம்**. இது *தில்லை* எனப்படும் சிதம்பரத்தைப் பற்றியது. அக்காலத்தில் தமிழருக்குத் தலபுராணக் காதல் அதிகமாக இருந்தது. அதனால் ஒருதலத்திற்கே பல புராணங்கள் தோன்றின. சிதம்பரத்திற்கு மூன்று தலபுராணங்கள் உள்ளன. பரஞ்சோதி முனிவர் பாடிய திருவிளையாடற்புராணம், துறைமங்கலம் சிவப்பிரகாசருடைய



சகோதர்களாகிய கருணைப்பிரகாசரும் ஞானப்பிரகாசரும் பாடிய சீகாளத்திப்புராணம், திரிகூடராசப்ப கவிராயர் பாடிய திருக்குற்றலத் தலபுராணம், சிவஞானமுனிவரின் காஞ்சிப்புராணம், அவருடைய மாணாக்கராகிய கச்சியப்பமுனிவரின் திருவானைக்காப்புராணம், திருத்தணிகைப்புராணம், திருப்பேரூர்ப்புராணம், அவரைத் தம்முடைய மானசீக குருவாகக் கொண்ட மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் பாடிய திருநாகைக்காரோணப்புராணம், திருப்பெருந்துறைப் புராணம் என்பனவும் இவை போன்ற வேறு பல தலபுராணங்களும் காப்பியங்களுக்கு நிகரான கவிச்சுவை நிறைந்தன.

பொதுவாகத் தலபுராணங்கள், தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனது பழமை, பெருமை, அவனை வழிபட்டு நலம் பெற்றவர்களுடைய வரலாறுகள், வழிபடும் முறை, தலத்தின் மூர்த்தி, தீர்த்த விசேடங்கள் முதலியனவற்றைக் கூறுவனவாக இருக்கும்.

வடமொழியும் தென்மொழியும் முற்றக் கற்ற புராண ஆசிரியர்கள் மேற்கூறியவற்றைக் கூறுவதோடு சமாதானம் அடையவில்லை. தாங்கள் பலநூல்களில் படித்து அறிந்த பலவற்றையும் தாம் படைக்கும் புராணகாப்பியத்தில் பாடிப் பதிவு செய்து வைத்துள்ளனர்.

தமிழ்த் தலபுராணங்கள் தம் பார்வையைத் தமிழ்நாட்டளவில் குறுக்கிக் கொள்ளாமல் இந்தியத் திருநாடு முழுவதிலும் செலுத்தின. தமிழ் மரபை வேதமரபோடு இணைத்துத் தென்னாட்டுச் சைவத்தின் பார்வையை விரிவடையச் செய்தன.

இந்திரன், பிரமன், திருமால் முதலிய தேவர்களும், பராசரன், வியாதன், காசிபன், மார்க்கண்டன், ததீசி, அகத்தியர், பதஞ்சலி, உபமன்யூ, மிருகண்டு, விசுவாமித்திரர், வசிட்டர் முதலிய இருடிகளும் புராணக்கதைகளில் பாத்திரங்களாகி, தமிழ் மக்களுக்கு நெருக்கமானார்கள்.



புராணக்கதை மாந்தர்கள் பலர் வடநாட்டில் பிறந்து தமிழ்நாட்டுக்கு வந்து இங்கு உள்ள தலத்தில் வழிபட்டு முத்தியடைந்தர்கள். இந்த முறையில் தமிழ் மக்கள் வடநாட்டுடனும் மக்களுடனும் இலக்கியவழி அறிமுகமனார்கள். இமயமும் காசியும் கங்கையும் தமக்கும் உரியன என்ற உணர்வைப் பெற்றார்கள். அவை தமக்கு உரியவை என்பது போல இங்குத் தில்லையும் காஞ்சியும் காவிரியும் குமரியும் இராமேசுவரமும் வடநாட்டு இந்துக்களுக்கும் உரியன என்ற விரிந்த மனம் பெற்றனர். தமிழர்களால் அவர்கள் புராண இலக்கியங்களின்வழி அறியப்பட்டு நேசிக்கப்படுவோரானார்கள். திருக்கயிலையில்தொடங்கித் தமிழகத்தில் நடந்து மீண்டும் திருக்கயிலையில்முடியும் கதைகளும் தமிழ்த்தல புராணங்களில் உண்டு.

புராணம் பாடிய பெருங்கவிஞர்கள் தெய்வத்தமிழை மிகவும் போற்றி வணங்கினார்கள். ஆனால், வடமொழியை வெறுக்கவில்லை; வேதத்தைப் பழிக்கவில்லை. வேத உபநிடத வாக்கியங்களை உரிய இடங்களில் தம் புராணங்களில் மொழிபெயர்த்துச் சேர்த்துக் கொண்டனர். வேத வாக்கியங்களுக்குச் சரியான விளக்கங்களை அளித்தனர்.

இத்தகைய உபகாரங்கள் சிலவற்றைச் சுட்டிக் காட்டுவதே இந்தக் கட்டுரையின் நோக்கம்.

## வேதங்களும் தலபுராணங்களும்

### திருவிளையாடற் புராணம்

தமிழ்ப்பற்றாளர்களாகிய சைவர்களிற் சிலர், வடமொழியினும் தமிழை உயர்த்திக் காட்ட வேண்டிக் கூறும் பாடல்கள் இரண்டு. பரஞ்சோதிமுனிவரின் திருவிளையாடற் புராணத்திலுள்ள அந்த இரண்டு பாடல்கள்:

**கண்ணுதற் பெருங்கடவுளுங் கழகமோ டமர்ந்து**
**பண்ணுறத் தெளிந்தாய்ந்த விப்பசுந் தமிழ் – ஏனை**
**மண்ணிடைச் சிலவிலக்கண வரம்பிலா மொழிபோல்**
**எண்ணிடப் படக்கிடந்ததா எண்ண வும்படுமோ**

**தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை**
**உண்ட பாலனை அழைத்ததும் எலும்புபெண் உருவாக்**
**கண்டதும் மறக்க தவினைத் திறந்ததுங் கன்னித்**
**தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்**

இந்த இரண்டு பாடல்களும் திருமுறைத் தமிழின் பெருமையைப் பறைசாற்றுகின்றனவே அன்றி வெறுந்தமிழை அல்ல.

இந்தப் பாடல்கள் செந்தமிழ் வழங்கும் நாட்டினைச் சூழ்ந்துள்ள சிங்களம், பழந்தீவு, கொல்லம், கூபம், கொங்கணம், துளு, குடகம், கருநடம், கூடம், வடுகு, தெலுங்கு, கலிங்கம் ஆகிய பன்னிரு தேயங்களில் வழங்கிய மொழியையே (இவை கொடுந்தமிழ் நாடு என இலக்கண நூல்களில் கூறப்பட்டுள்ளன) **இலக்கண வரம்பிலா மொழி** எனக் கூறியதே அன்றி, வடமொழியை அவ்வாறு கூறவில்லை..

'*இலக்கண வரம்பிலா மொழி*' என முனிவர் கூறியது வடமொழியைக் குறிக்காது, ஏனெனில் இவ்விரண்டிற்கும் முந்திய செய்யுளில், பாணிணிக்கு வடமொழி இலக்கணத்தையும் அதற்கு நிகராக மலயமாமுனியாகிய அகத்தியருக்குத் தென்மொழியையும் சிவன் உணர்த்தியருளினன் என்று கூறப்பிடப்பட்டுள்ளது.

புராண இலக்கிய ஆசிரியர்கள் தமிழ்மொழியோடு வடமொழியிலும் புலமை வாய்ந்தவர்கள்; இருமொழிப் புலவர்களாகத் திகழ்ந்தவர்கள். வடமொழி ஒன்றை மட்டும் அல்லது தமிழ் ஒன்றைமட்டும் அறிந்தவர்களைக் காட்டிலும் இருமொழியும் அறிந்த இவர்கள் புலமை வீறு கொண்டவர்கள். இவர்கள் வேதங்களையும் பயின்றவர்கள்.

திருவிளையாடற் புராணத்தில் '*வேதத்துக்குப் பொருளருளிச் செய்த படலம்*' என்று ஒரு படலமும் உள்ளது.

இப்படலத்தில் சிவன் வேதத்தை அருளிச்செய்த முறைமையும் வேதம் *கருமகாண்டம், ஞானகாண்டம்*என இருவகையாக நிற்றலையும் கருமகாண்டம் சிவார்ச்சனை முதலியன என்றும் அவற்றால் ஞானம் உதிப்பதற்கு உரிய பக்குவம் உண்டாகும் என்றும் விளக்கியது. வேதத்தின் வழித் தோன்றிய மதங்கட்கெல்லாம் வேதமே பிரமாணம் என்றும் ஸ்மிருதி வேதத்திற்கு அனுகுணம் (இரண்டாம் குணம்); வேத சம்பந்தத்தால் அந்த ஸ்மார்த்தமும் வைதிகம் என்று சொல்லப்படும்; அந்த வைதிகத்திற்கும் மேலாகச் சொல்லப்படுவது வேதம் சாற்றும் சுத்தமார்க்கம் எனப் புராண ஆசிரியர் பரஞ்சோதி முனிவர் விரிவாக ஓதுகின்றார்.

"*தெருட்பெறு போக வீடு காரணமாய்ச் சிவமயமாம் மறைப்பொருள்*" என்றமையால், வேதம் சிவநெறிக்குப் பிரமாணம் என எடுத்துக் காட்டினார்.

இப்படலத்தால், இந்தியநாட்டில், ஏன், தமிழகத்தில், வேதநெறியை அனுசரித்து ஒழுகுவோர் அனைவரும் வைதிகர்கள்; ஸ்மிருதியின்படி ஒழுகுவோரும் மேற்கூறிய வைதிகரில் ஒரு பகுதியினரே; வேதநெறியே சுத்த மார்க்கம் என்பது புராண ஆசிரியரின் கருத்து எனத் தெரிகின்றது.

சிவபூசையின் இறுதியில் பூசை, செபம் ஆகிய அனைத்தின் புண்ணியப் பயனையும் சிவனுக்கே சமர்ப்பணம் செய்வர். அப்பொழுது கூறப்படும் வேத மந்திரம்,

**ஓம் ஹாம் சிவோ தா³தா சிவோ போ⁴ க்தா சிவ: ஸர்வமித³ம் ஜகத்|**
**சிவோ யஜதி ஸர்வத்ர யச்சி²வஸ் ஸோஹமேவ து||**

இதன் பொருள்: கொடுப்பவராய் இருந்து கொடுப்பவரும் நீயே; கொள்பவர்களாய் இருந்து கொள்பவரும் நீரே; உமது வியாபகத்தால் இந்த உலகம் முழுதும் நீரே; அதனால் பூசகராயிருந்து பூசிப்பவரும் நீரே; அடியேனும் நீரே."

இந்த மந்திரம் திருவிளையாடற்புராணத்தில் அழகிய கவிதையாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. அப்பாடல்:

**பூசையும் பூசைக் கேற்ற பொருள்களும் பூசை செய்யும்**
**நேசனும் பூசை கொண்டு நியதியிற் பேறு நல்கும்**
**ஈசனு மாகிப் பூசை யான்செய்தேன் எனுமென் போத**
**வாசனை யதுவு மான மறைமுதல் அடிகள் போற்றி.**

வேதம், பரமான்மாவாகிய இறைவன் அணுவிலும் அணுவாய்ப் பெரிதிலும் பெரிதாய்ச் சகல பிராணிகளின் இருதய குகையில் உள்ளான் எனக் கூறுகின்றது. அந்த வேத வசனம்,

**அணோ ரணீயான் மஹதோ மஹீயாநாத்மா|**
**கு³ஹாயாந்நிஹிதோஸ்ய ஜந்தோ:||**

என்பது. இது **தைத்திரீயாருண சாகை நாராயண வசனம்.**

இந்தவசனத்தின் கருத்தைத் திருவிளையாடற்புராண ஆசிரியர், சிற்சத்தித் துதியாக்கி,

**அண்டங்க ளெல்லாம் அணுவாக அணுக்க ளெல்லாம்**
**அண்டங்க ளாகப் பெரிதாய்ச் சிறிதா யினானும்**
**அண்டங்க ளுள்ளும் புறம்பும் கரியா யினானும்**
**அண்டங்க ளீன்றாள் துணையென்பர் அறிந்த நல்லோர்**

எனப் பாடினார்.

திருவிளையாடற் புராண ஆசிரியர் தமிழ் மொழியின்மேல் ஆராக் காதல் உடையவர். சிவனையன்றி பிற தெய்வம் வழிபடாதவர். ஆதலால், பிறமொழிகளில் உள்ள சிவதோத்திரங்களிலும் மனதைப் பறிகொடுத்தார். அவற்றைத் தாம் பாடிய புராணத்தில் தக்க இடங்களில் சுட்டிக் காட்டவும் செய்தார்.

சோமசுந்தரக் கடவுள் தடாதகைப் பிராட்டியாரைத் திருமணம் செய்துகொள்ள மணவணி கொள்ளுகின்றார். அந்த நிகழ்ச்சியின் இறுதியில் ஆசிரியர் கூறும் பாடல்:

**பந்தநான்மறைப் பொருள் திரட்டென வடபாடல் செய்து எதிர்புட்ப**
**தந்தன் ஏத்த, வானுயிர் உணவுருத்தெழு தழல்விடத் தெதிர் நோக்கும்**
**அந்தமாதி யிலான் நிழல் வடிவமாய் ஆடியின் நிழல்போல**
**வந்த சுந்தரன் சாத்து நீறொடு திருமாலையும் எடுத்து ஏந்த**
*(திருமணப் படலம் 112)*

'*நான்கு வேதங்களின் பொருளையும் திரட்டியதைப் போல வடமொழியில் புட்பதந்தன் எனும் கந்தருவன் பாடல் செய்து புகழ்ந்து ஏத்த*' என்று புஷ்பதந்தர் என்பார் பாடிய '*சிவம ம்ந ஸ்தோத்திரம்*' என்ற வடமொழி நூலைச் சிவன் உவக்கும் தோத்திரமாகச் சிறப்பிக்கின்றார்.

*ஆதிசங்கரர்* தம்முடைய *சிவானந்தலகரி* என்னும் தோத்திரநூலின் முதற்பாட்டில், சிவனும் சத்தியும் பிரிப்பரிய தாதான்மிய சம்பந்தம் உடையவராதலின் சிவனுக்கும் உமைக்கும் சேர்த்து ஒருங்கே தோத்திரம் செய்கின்றார். ('*கலாப்யாம் சூடாலங்க்ருத சசிகலாப்யாம் நிஜதப: பலாப்யாம்…* 'எனத்தொடங்கும் பாடல்).

அந்தப் பாடலின் தமிழ் வடிவம், "*கலையானார் கலைமதியங் கண்ணியானார், கருதுதவப் பலனொருவர்க் கொருவ ரானார் ……. உமைசிவனார்க் கிவ்வணக்கம் உரியதாமே*"என்பதாகும்..

உமைக்குச் சிவனும் சிவனுக்கு உமையும் கிடைத்தது அவர்களுடைய தவப்பலன் என்னும் இக்கருத்தைத் திருவிளையாடற் புராண ஆசிரியர், தகுந்த இடத்தில் பயன்படுத்திக் கொள்கின்றார்.



சோமசுந்தரப் பெருமானின் மாப்பிள்ளை அழைப்பு நடைபெறுகின்றது. பெருமானைக் கண்ணுறக் கண்டு மகிழ்ந்த மதுரைவாசிகள்,

**நங்கையென் நோற்றாள் கொல்லோ நம்பியைத் திளைத்தற் கென்பார்**
**மங்கையை மணப்பான் என்னோ வள்ளலும் நோற்றான் என்பார்**

எனத் திருவிளையாடற்புராண ஆசிரியர் கூறுகின்றார்.

திருமணம் நிகழ்கின்றது. பிரமன் தன் மக்களாகிய சனகாதி நால்வரும் உடனிருக்கத் திருமண வேள்வி செய்கின்றான். வேள்வித்தீயில் நெய் சொரிகின்றான். வேள்வித் தீயானது நெய்யை உண்டு அகடு (வயிறு, நெருப்பின் அடிப்பாகம்) ஏப்பம் விடுவது போன்ற ஒலியுடன் ஆர்த்து நிமிர்ந்தது.

இந்நிகழ்ச்சியினைக் கூறும் பாடல்:

**மாக்கடி முளரி வாணன் மைந்தரோடு ஒருங்கு வைகி**
**நாக்களின் நடுவாரத் துடுவையால் நறுநெய் ஆர்த்தி**
**வாக்கிட ஆர மாந்தி வலஞ்சுழித்து அடடு வீங்கித்**
**தேக்கிடும் ஒலியின் ஆர்த்து நிமிர்ந்தது தெய்வச் செந்தீ**

(*மா*--பெரிய
*கடி*–நறுமணம்
*முளரிவாணன்*–தாமரை இருக்கை கொண்ட பிரமன்
*நாக்கலின் நடுவார* என்றது, அக்கினிதெவனுக்கு ஏழு நாக்குகள் உண்டு, அவையாவன: காளி, கராளி, மனோஜவை, சுலோகிதை, சுதூம்ரவருணை, ஸ்புலிங்கினி, விசுவரூபி என்பன. அவற்றுள் நடு நாக்கு சுலோகிதை என்னும் நாக்கு.
*துடவை*–வேள்வியில் நெய்யை வார்க்கப் பயன்படுத்தும் சிருக்கு சிருவம் என்னும் கருவிகள்.)

இதன் விரிவு *முண்டகோபநிஷத்தில்* உள்ளதாகக் கூறப்படுகின்றது.

சிவபத்தி மொழி வேற்றுமையை அறியாது. சிவபத்தி, தென்மொழி வடமொழிப் போராட்டத்தில் சிக்கிக் கவி இன்பத்தையும் பத்தியின் சுகத்தையும் அடியார் கூட்டுறவையும் இழந்துவிடாது.

**(தொடரும்...)**

**குறிச்சொற்கள்:** 'சிவமஹிம்ந ஸ்தோத்திரம், அகத்தியர், அரசு ஆதரவின்மை, ஆதிசங்கரம், இந்து மதம், இந்துத்துவம், இருடிகள், இருமொழிப் புலமை, இலக்கண வரம்பிலா மொழி, இலக்கியச் சுவை, உமாபதி சிவம், கச்சியப்ப முனிவர், கருமகாண்டம், காமச்சுவை, குருஞான சம்பந்தர், குருநமச்சிவாயர், கூளப்பநாயக்கன் காதல், கூளப்பநாயக்கன் விறலிவிடு தூது, கொடுந்தமிழ் நாடு, கோயில், சக்தி, சிதம்பரம், சிற்றிலக்கியங்கள், சிவஞான முனிவர், சிவன், சிவபத்தி, சிவானந்தலகரி, சைவசமயச் சார்பு, சொற்சுவை, ஞானகாண்டம், தமிழகம், தமிழர், தமிழ், தமிழ் இலக்கியம், தம்பிரான் சுவாமிகள், தல உரிமை, தலபுராணம், திருக்கோயிற்புராணம், திருமடங்கள், திருவிளையாடற் புராணம், தில்லை, தேவர்கள், தொடர், பக்தி, பரஞ்சோதி முனிவர், பாணிணி, புராண இலக்கியங்கள், வடமொழிப் பற்று, வருணகுலாதித்தன் மடல், வழிபாடு, வைதிகர்கள்